சர்க்கார் உதவி கிடைக்கும். என்னென்ன விதமான உதவிகள் தேவையென்று கோருகிறார்களோ அதைச் சர்க்கார் பரிசீலித்து உதவி செய்கிறது.

*Free supply of cows and buffaloes to Harijans*

*298 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்கு பசுமாடுகளும், எருமைகளும் இலவசமாக வாங்கிக் கொடுப்பதற்கான திட்டமானது அரசாங்கத்தால் பரிசீலனை செய்யப்பட்டுவரின், விவரங்கள் யாவை?

THE HON. SRI P. KAKKAN: There is no such proposal under consideration now.

SRI P. G. MANICKAM: ஸார், நமது அரசாங்கமானது சமுதாய நலத் திட்டம், தேசீய விஸ்தரிப்புத் திட்டம் மூலமாக மக்களுடைய பொருளாதாரத்தை உயர்த்துவதற்காக பசு மாடு களையும், எருமைகளையும் பாதி விலைக்கு வாங்கிக் கொடுக்கிறார்கள். ஆனால் அந்தப் பாதி விலையைக்கூட ஹரிஜனங்கள் கொடுக்க முடியாமல் இருப்பதால் ஹரிஜன நல இலாகா மூலமாக இவர்களுக்கு இலவசமாகவே இவற்றை வாங்கிக் கொடுக்க—சட்டத்தில் இடமில்லாவிட்டாலும், சட்டத்தை மாற்றியாவது—சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN: உணவு உற்பத்தித் திட்டத்தின் கீழ் ஹரிஜனங்களுக்குக் காளை மாடுகள் இலவசமாக வாங்கிக் கொடுக்கப்பட்டு உற்பத்தியைப் பெருக்க ஏற்பாடு செய்யப்பட்டது. பசு மாடு வாங்கிக் கொடுப்பது அவ்வளவு நல்லதல்ல என்று இந்த அரசாங்கம் முடிவு செய்திருப்பதால் அதை வாங்கிக் கொடுக்கத் தயாராக இல்லை. ஏழை ஹரிஜன மக்களுக்குப் பசு மாடுகள் வேண்டுமானால் கூட்டுறவுச் சங்கங்கள் வைத்து அதன் மூலம் அரசாங்கத்திற்கு விண்ணப்பித்தால் அவர்களுடைய பிழைப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY: ஆதித் திராவிட மக்கள் நிலத்தை உழ காளை மாடுகள் வாங்கிக் கொடுப்பதில் சில காளைகள் நோய் வாய்ப்பட்டு விட்டால், அவர்களுக்கு இந்த அரசாங்கம் எப்படிச் சலுகை கொடுக்கிறது?

THE HON. SRI P. KAKKAN: மனிதர்களுக்கே நோய் வந்து விடுகிறது. மாட்டுக்கும் வந்து விடுகிறது. மாடுகள் நோயுற்றிருந்தால் ஹரிஜன நல இலாகா அதிகாரிக்கு எழுதினால் அதுபற்றிக் கவனிக்கப்படும்.

19th August 1960]

SRI P. G. MANICKAM : அவ்வாறு சட்டம் இயற்றப்படாவிடினும், சமுதாய விஸ்தரிப்புத் திட்டம், தேசிய விஸ்தரிப்புத் திட்டம் மூலமாகப் பாதித் தொகையைக் கொடுக்கும்போது ஹரிஜன மக்களுக்கும் அந்தத் தொகையைக் கடனாகவோ இனாமாகவோ கொடுக்க அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI P. KAKKAN : கூட்டுறவு சங்கத்தின் மூலமாக பாதி கடனாகவும், பாதி இனாமாகவும் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : The questions to be answered by the Hon. Minister for Electricity will be taken up on some other date.

*Prices of gold and silver*

* 301 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have made any representation to the Union Government to check the rise in prices of gold and silver?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the price of bullion has increased abnormally in recent times? If so, will the Government consider the question of controlling its price?

THE HON. SRI R. VENKATARAMAN : That must only worry rich people. Government are not very much worried about it.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether the Government have received any protest from the Women's Organization regarding the increase in the price of gold?

THE HON. SRI R. VENKATARAMAN : None whatever except from Sri Rasheed.

*Sericulture Unit*

* 302 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சேலம் ஜில்லா ஹோசூரில் பட்டு உற்பத்திசாலை நிறுவுவதற்காக "Central Silk Board" மூலம் எவ்வளவு தொகை உதவி கிடைக்கும்?

(ஆ) சென்னை ராஜ்யத்தில் எத்தனை பவுண்ட் "Raw Silk" 1959–60-ல் இறக்குமதி செய்யப்பட்டது?

(இ) 1960–61-ல் எத்தனை ஏகரா நிலப்பரப்பில் பட்டுப் பூச்சிகள் உற்பத்தி செய்யப்படும்?

(ஈ) விவசாயிகளுக்கு எத்தனை ரூபாய் கடனாக 1960–61-ல் கொடுக்கப்படும்?